26th April 1962]

THE HON. SRI R. VENKATARAMAN : ரொம்பவும் சந்தோஷம். தென் ஆற்காடு மாவட்டத்திலே எங்கே அமைப்பது என்பது பரிசீலனையில் இருக்கிறது.

SRI A. DURAIYARASAN : தஞ்சை மாவட்டத்திலே அரந்தாங்கியில் ஒரு நூற்பாலை வைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு கூட்டுறவு நூற்பு ஆலை வைப்பது என்று சொன்னால் சற்றேரக்குறைய 14 லட்சம் ரூபாய் வசூல் செய்வதற்கு வசதி இருக்கவேண்டும்.

* 8 Q.—SRI P. V. SRIRAMULU : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether there is a proposal to start a co-operative spinning mill at Krishnagiri, and

(b) if so, the stage at which the matter stands?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) & (b) Government have not received any specific proposal to set up a Co-operative Spinning Mill at Krishnagiri. Government are at present examining the possibilities of setting up a few more Co-operative Spinning Mills in the State. The location of these mills will be decided in due course.

SRI P. V. SRIRAMULU : உடனடியாக அங்கு கூட்டுறவு நூற்பாலை அமைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : பரிசீலனை செய்யப்படும். அங்கு நிதி எவ்வளவு வசூல் செய்யப்படுகிறதோ அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

SRI S. MADHAVAN : இந்தக் கூட்டுறவு நூற்பாலை ஏற்படுத்துவதில் தனியார் துறையில் உள்ளவர்களுக்கு அங்கம் தரப்படுமா ?

(பதில் இல்லை.)

SRI RAMA ARANGANNAL : காஞ்சியில் ஒரு நூற்பு ஆலை ஏற்படுத்த உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு நூற் பாலை வைக்க சாங்ஷன் ஆகிவிட்டது.

*Election Posters*

*9 Q.—SRI M. KARUNANITHI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தேர்தல் சுவரொட்டிகளின்மீது நடவடிக்கை எடுக்குமாறு மத்திய சர்க்காரிடமிருந்து தமிழக சர்க்காருக்கு தகவல் வந்துள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.